### *Sathanur Project*

* 6 *Q.*—SRI K. ANBAZHAGAN (on behalf of Sri P. U. Shanmugam): Will the Hon. the Minister for Public Works be pleased to state what the Government propose to do with the buildings constructed in the Sathanur Project area?

THE HON. SRI P. KAKKAN: After completion of the project works the buildings required by Public Works Department for their departmental purposes will be retained and the rest will be allotted to other Government departments for their use.

SRI A. V. P. ASAITHAMBI: On a point of information . . .

MR. SPEAKER: You may ask a question.

SRI A. V. P. ASAITHAMBI: தைத் திருநாளிலிருந்து அரசாங்க அலுவலக நடவடிக்கைகள் தமிழிலேயே நடந்துவருகிறது. இந்த சபையில் கேள்விகளும் பதில்களும் தமிழில் இருப்பதற்கு கனம் அமைச்சர் அவர்கள் நடவடிக்கை எடுப்பார்களா ?

MR. SPEAKER: அது கனம் அமைச்சருடைய பொறுப்பு இல்லை. அது சபாநாயகர் செய்யவேண்டிய வேலை. அதை சீக்கிரமே செய்யப் போகிறேன்.

SRI K. ANBAZHAGAN: சாத்தனூர் அணைக்கட்டுத் திட்டம் நிறைவேறியவுடன அங்குள்ள கட்டிடங்களில பொது மராமத்து இலாகாவிற்கு ஒதுக்கப்பட்டவை போக மீதியுள்ள கட்டிடங்கள் மற்ற அரசாங்க இலாகாக்களுக்கு ஒதுக்கப்படும் என்று கனம் அமைச்சர் அவர்கள் தெரிவிக்கிறார்கள். அந்தக் கட்டிடங்களை மற்ற அரசாங்க இலாக்காக்கள் எந்த வகையில் பயன் படுத்தும் என்பதே கேள்வியின் நோக்கமாகையால் அதைத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN: எந்த எந்த இலாகாக்களுக்கு எந்த எந்த இடங்களைக் கொடுக்க வேண்டும் என்பதுபற்றி யோசனைகள் கூறும்படி பிரதம எஞ்சினியரைக் கேட்டிருக்கிறோம். அவருடைய யோசனைகள் வந்தவுடன் அவைகளைப் பரிசீலனை செய்தபின் எந்த எந்த இலாகாக்களுக்குக் கட்டிடங்கள் கொடுக்கப்பட வேண்டுமோ அவைகளுக்குக் கொடுக்கப்படும்.

### *Inter-State Bus Transport*

* 7 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether any agreement has been reached with the neighbouring States regarding the plying of Inter-State Bus Transport; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI V. RAMAIAH: (*a*) No, Sir. The question is under correspondence with the respective States.

(*b*) Does not arise.

SRI N. K. PALANISAMI: இந்தப் பேச்சுவார்த்தைகள் இரண்டு மூன்று மாதங்களாக நடந்துவருகின்றன என்று நினைக்கிறேன். இவை எந்த அளவுக்கு வெற்றிகரமாக நடந்திருக்கின்றன ? ஏதாவது வெற்றிகரமான முடிவு ஏற்படுமா ?

10th February 1958]

THE HON. SRI V. RAMAIAH : இந்தப் பிரச்னையை வெற்றிகரமாகத் தீர்ப்பதற்கு தொடர்ந்து பேச்சு வார்த்தைகள் நடத்தவேண்டும். மேலும், பல கட்டங்களில் பேச்சு வார்த்தைகள் நடத்தவேண்டும். ஒவ்வொரு கட்டத்தையும் வெற்றிகரமாக முடிக்கலாம் என்ற நம்பிக்கையில் பேச்சு வார்த்தைகள் தொடர்ந்து நடத்தப்பட்டு வருகின்றன.

SRI N. K. PALANISAMI : 'வெஹிகல் டாக்ஸ்' ஒவ்வொரு ராஜ்யத்திலும் ஒவ்வொரு விதமாக இருக்கிறது. இது சம்பந்தமாக இந்தப் பேச்சு வார்த்தைகளில் ஏதாவது முடிவு ஏற்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI V. RAMAIAH : இந்தப் பிரச்னை எழுகிறபோது 'டாக்ஸ்' சம்பந்தமான பிரச்னையும் எழுகிறது. எல்லா ராஜ்யங்களிலும் சமமான முறையில், எல்லா ராஜ்யங்களுக்கும் பொறுத்தமான முறையில், இது இருக்கவேண்டும் என்ற நோக்கத்துடன்தான் இந்தப் பேச்சு வார்த்தைகள் நடந்து வருகின்றன.

*Personal Assistants to Special Officers for district boards*

* 8 *Q.*—SRI A. R. SUBBIAH MUDALIAR : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether Personal Assistants to Special Officers for district boards have been posted ; and

(*b*) if so, how many from the Local Administration department?

THE HON. SRIMATHI LOURDAMMAL SIMON : (*a*) Yes, Sir.

(*b*) Four.

SRI A. R. SUBBIAH MUDALIAR : இந்த அதிகாரிகள் மொத்தம் எத்தனைபேர் நியமிக்கப்பட்டார்கள் ? எந்த இலாகாவிலிருந்து எடுக்கப்பட்டார்கள் ?

THE HON SRIMATHI LOURDAMMAL SIMON : மொத்தம் பத்து நபர்கள் நியமிக்கப்பட்டார்கள். இவர்களில் நான்குபேர்கள் ஸ்தல ஸ்தாபன இலாகாவிலிருந்து எடுக்கப்பட்டார்கள். மற்றவர்கள் ரெவின்யூ இலாகாவிலிருந்து எடுக்கப்பட்டார்கள்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : ஸ்தல ஸ்தாபன இலாகாவில் அருகதையுள்ள மற்றவர்கள் இல்லாததால் மற்ற இலாகாக்களிலிருந்து ஆறு பேர்கள் எடுக்கப்பட்டார்களா ?

THE HON. SRIMATHI LOURDAMMAL SIMON : ஸ்தல ஸ்தாபன இலாகாவிலிருந்தே மற்றவர்களையும் எடுக்காததற்குக் காரணம், அங்குள்ள மற்றவர்கள் இதற்கு அருகதையற்றவர்கள் என்பது அல்ல. அலுவல்களைச் செவ்வனே நடத்துவதற்காக இரண்டு இலாக்காக்களிலிருந்தும் அதற்குத் தகுந்தவர்களை எடுத்திருக்கிறோம்.

SRI V. K. RAMASAMY MUDALIAR : 'பெர்ஸனல் அஸிஸ்டென்ட்—ஸ்பெஷல் ஆபீஸர், டிஸ்ட்ரிக்ட் போர்ட்ஸ்' மட்டுமின்றி ஜில்லா ரீஜனல் இன்ஸ்பெக்டர்களாகவும் ஜில்லாவில் பல வேலைகளை கவனித்து வருகிறார்கள். ஜில்லா போர்டு வேலைகள் அதிகமாக இருக்கும்போது அவர்கள் இரண்டு வேலையைத் திருப்திகரமாகப் பார்க்க முடியுமா ?

THE HON. SRIMATHI LOURDAMMAL SIMON : ஜில்லா போர்டுகள் சம்பந்தமாக கலெக்டர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு உதவி செய்வதற்காக இந்த 'அஸிஸ்டென்ட்ஸ்' நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகையால் அவர்களால் முடிந்தவரையிலும் இந்த வேலையை அவர்கள் கவனித்துவருகிறார்கள்.